# கள்ளரும்
# கள்ளர் அபிவிருத்தியும்






ஆசிரியர்
அ. சோமசுந்தரம், B.A., B.L.
எழுதியது



அன்னார் பிறந்த அறுபதாவ தாண்டில்
நினைவுக்குறியாக
வெளியிடப்பெற்றது



வெளியிடுபவர்
அவர்தம் இளவல்
வித்துவான் அ. சண்முகசுந்தரம், B.A.,
...வில் தெரு, கருந்திட்டைக்குடி, தஞ்சாவூர்

I

# கள்வரும்
# கள்வர் அபிவிருத்தியும்



வழக்கறிஞர்
அ. சோமசுந்தரம், B.A., B.L.
எழுதியது



அன்னார் பிறந்த அறுபதாவ தாண்டில்
நினைவுக்குறியாக
வெளியிடப்பெற்றது



வெளியிடுபவர்
அவர்தம் இளவல்
வித்துவான் அ. சண்முகசுந்தரம், B.A.,
கிருஷ்ணன்கோவில் தெரு, கருந்திட்டைக்குடி, தஞ்சாவூர்

# முன்னுரை

"கள்ளரும், கள்ளர் அபிவிருத்தியும" என்பது அ. சோம சுந்தரம், B.A., B.L., அவர்களால் சென்னை சட்டக் கல்லூரியில் படிக்கும்பொழுது எழுதி, 'திராவிடன்' பத்திரிக்கையில் இரௌத்திரி, கார்த்திகை, க (24–11–1920), ௰௬ (1–12–1920), ௨௰௩ (8–12–1920) ஆம் நாட்களில் வெளியிடப்பெற்றது.

இவர் மன்மத, பங்குனி, ௫-ஆம் நாள் (16–3–1896) திரு. ந. வா. அண்ணாமலைப் பிள்ளை அவர்களின் முதல் மகனாகக் கள்ளர் குலத்தில், சைவ சமயத்தில் பிறந்தார். தஞ்சை தூய பேதுரு உயர்நிலைப் பள்ளியில் (St. Peter's High School, Tanjore) பள்ளியிறுதி வகுப்பு (S. S. L. C.) முடியப் படித்தார். பின், திருச்சி "எஸ். பி. ஜி." (S. P. G) கல்லூரியில் படித்து இண்டர்மீடியேட் (Intermediate) தேர்ச்சியில் தேறினார். பின் சென்னை கிருஸ்துவக் கல்லூரியில் (Madras Christian College) சேர்ந்து "கெயித்னஸ் ஹால்" (Caithness Hall) என்ற மாணவரில்லத்தில் தங்கிப் படித்தார். பல பரிசுகள் பெற்றார். 1919ஆம் ஆண்டில் பி. ஏ. (B.A) தேர்ச்சியில் ஆங்கிலம், நாட்டு வரலாறு ஆகிய இரு பகுதிகளிலும் இரண்டாம் வகுப்பில் (Second Class) தேறினார். பின்னர், சென்னை சட்டக் கல்லூரியில் (Madras Law College) ஈராண்டுகள் படித்து 1921ல் பி. எல். (B. L.) பட்டம் பெற்றார். வழக்கறிஞரானார். அது முதல் தஞ்சையில் வழக்கறிஞராகவிருந்து யுவ, பங்குனி, ௨௰௭ (8–4–1936) ஆம் நாள் இறைவனடி சேர்ந்தார்.

கள்ளர் சமூகத்தின் முன்னேற்றத்தில் மிகுந்த கவலையுள்ளவர். தஞ்சைக் கள்ளர் மகாசங்கத்தின் மாநாடுகளில் கலந்து கொண்டதோடு, நாகப்பட்டினத்தில் 1926ஆம் ஆண்டில் நடைபெற்ற கள்ளர் மாநாட்டிற்குச் சென்று தம் சாதிப்பற்றையும், தம் சாதியார் முன்னேற்றத்தில் தமக்குள்ள கவலையையும், தெரிவித்துக்கொண்டார்.

"மதுரை — இராமநாதபுரம் கள்ளர் சங்கத்தை" இராமநாதபுரம் மாவட்டத்தில் குரோதன, மாசி, ௨௰௪ (7–3–1926) ஆம் நாள் நிறுவினார்.

பார்ப்பனரல்லாதார் முன்னேற்றத்திற்காக உழைத்தார். பார்ப்பனரல்லாதார் மாநாடுகளில் பங்கெடுத்துக்கொண்டார்.

தஞ்சையில் 1918 ஆம் ஆண்டில் 'திராவிட வாலிபர் சங்கம்' (Young Men's Dravidan Club) என்ற கழகத்தை நிறுவினார்.

1927ஆம் ஆண்டில் நிறுவப்பெற்ற பார்ப்பனரல்லாத இளைஞர் சங்கத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்று அச் சங்கத்தைச் சீரும் சிறப்புமுற நடத்திவந்தார்.

22-6-1928ல் நடைபெற்ற தஞ்சை மாவட்ட பார்ப்பன ரல்லாத இளைஞர் மாநாட்டின் பொது அமைச்சராக விருந்து அம் மாநாட்டை மிகச் சிறப்புற நடத்தினார்.

கூட்டுறவு இயக்கத்தில் மிகுந்த பற்றுடையவர். ஆதலால் பலவாண்டுகள் கருந்திட்டாங்குடி திராவிட கூட்டுறவு நிதியின் (Karunthattangudi Dravida Co-operative Society Ltd.) வினைக்குழு உறுப்பினராகவும், அதன் வழக்கறிஞராகவும் தொண் டாற்றினார். 1933 ஆண்டுமுதல் உயிர் பிரியும்வரை தஞ்சாவூர் கூட்டுறவு நில அடமான பாங்கியின் தலைவராகவிருந்து அதன் முன்னேற்றத்திற்காக மிகவும் உழைத்து அது சீரும் சிறப்புமுற ஓங்கி வளரச் செய்தார்.

சைவ சமயத்தில் அளவிலாத அன்புடையவர். என்றும் மாறாத நிலைத்த கடவுட் பற்றுடையவர்.

திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் கள்ளர் சரித்திரம் எழுதுவதற்கு முன்னரே கள்ளர் குல மக்களின் வரலாற்றை ஆராய்ந்திருப்பதோடு, அவர்கள் முன்னேற்றத்திற்கான வழிகளை யும் எடுத்துக்காட்டி யிருக்கிறார். அவற்றை அரசாங்கத்தாரும் ஒப்புக்கொண்டிருக்கின்றனர்.

கள்ளர் குல மக்கள் குற்ற மரபினர் சட்டத்தினின்று (Criminal Tribes Act) விலகுதற்கேற்ற வழிகளைக் கூறி யுள்ளார். இப்போது இச் சட்டம் நீக்கப்பெற்றது மகிழ்தற்குரிய தாகும். விதவா விவாகத்தைத் தள்ளாது கொள்ளவேண்டுமென் றும், திருமணம் முதலியவற்றில் பிராமணர்களை விலக்குதல் நம் மக்களுக்கு நன்மைபயப்பதில் முதன்மையானதென்றும் வற்புறுத் திக் கூறியிருக்கின்றார்.

இது எழுதப் பெற்று பலவாண்டுகளாயினும், இவர் எழுதிய திலிருந்து சிறிதும் மாற்றப் பெறாமல் பிற்போக்காளர்களாகிய கள்ளர் சமூகத்தாரின் நலத்தைக் கருதி வெளியிடப் படுகின்றது.

திராவிடன் ஆசிரியர், இரௌத்திரி, கார்த்திகை, உ௰௩-ஆம் நாள் (8-12-1920) எழுதிய குறிப்பும் வெளியிடப் பெறுகின்றது.

படித்துப் பயன் பெறுவார்களாக.

அ. சண்முக சுந்தரம்
21-7-'56

# கள்ளரும், கள்ளர் அபிவிருத்தியும்

கள்ளர் சரித்திரத்தை எழுதப் புகுமுன், நான் நம் நேயரைக் கேட்டுக்கொள்வ தென்ன வென்றால் இதில் சொல்லி யிருக்கும் எல்லா விஷயமும் உண்மையென்று எடுத்துக்கொள்ளக் கூடாது. ஒரு ஜாதியார் சரித்திரத்தை எழுதுவதில் எதைத் தள்ளுவது, எதைச் சேர்ப்பது என்ற பெருத்த கேள்வி கிளம்பும். ஏனெனில், ஒவ்வொரு ஜாதியாரிடத்திலும் அநேக பூர்வீகக் கதை களும் உண்மைச் சரித்திரமும் ஒரு காடாக அடர்ந்திருக்கின்றன. மேலும் தென்னிந்திய தேச சரித்திரமும் திராவிடர்களின் சரித்திரமும் சரியானபடி ஆராய்ந்து எழுதாத நிலைமையில், கள்ளரைப்போன்ற ஒரு பெரிய ஜாதியாரைப்பற்றி எவ் விஷயங்கள் எழுதப்பட்டாலும் அவை பல ஊகங்களாகவும் பின் உண்மைக ளாகவும் நிலைநாட்டவேண்டிய ஸ்திதியில் இருக்கின்றன வென் பதை அறியவேண்டும். இன்னும் தமிழில் பாண்டித்திய முள்ளவரும் திருச்சி எஸ். பி. ஜி. கல்லூரியில் தலைமைத் தமிழ்ப் பண்டிதருமாகிய ஸ்ரீமான் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள், இச் சரித்திரத்தை எழுதத் தொடங்கி இன்னும் சொற்ப காலத் தில் பிரசுரிப்பார்களென்பதைக் கேட்டு நான் அகமகிழ்கிறேன்.

இச் சாதியாரின் சரித்திரம் தெரிய, தென்னிந்தியாவிலுள்ள ஜனங்களின் பூர்வீக சரித்திரமே ஒருவாறு தெரியவேண்டும். தென்னிந்தியாவிலிருக்கிற திராவிடர்களோ, அவர்களுக்கு முன் னிருந்ததாகச் சொல்லப்படும் நாக ஜாதியார்களோ, மத்திய ஆசியா விலிருந்தோ, மேற்கு ஆசியா கண்டத்திலிருந்தோ, திபேத், மங்கோலியா முதலிய தேசங்களிலிருந்தோ, அல்லது இப்பொழுது அமுங்கிப்போன லெமூரியா (Lemúria)க் கண்டத்திலிருந்தோ இத் தென்னிந்தியாவுக்கு வந்தவர்களென்று சொல்லப்படுகிறது. இவற்றில் இப்பொழுது அமுங்கிப்போன லெமூரியா கண்டத்தி லிருந்து வந்தவர்களென்பதே அநேகமாக உண்மையாக இருக்க வேண்டும். ஏனெனில், இதுவே தென்னிந்தியாவிலுள்ள திராவிட ஜாதியாரின் தனிமையான நடவடிக்கைகளுக்கும் பழக்க வழக்கங் களுக்கும் காரணமாகும். அநேக சரித்திர ஆராய்ச்சிக்காரர்கள் கள்ளரை நாக ஜாதியாரின் வம்சமென்றும், அவர்கள் நடவடிக்கை

களிலிருந்தும் உருவத்திலிருந்தும் சொல்லுகிறார்கள். இதற்கு மேற்கோளாக திருமங்கையாழ்வாருக்கும் நீலன் என்ற பெயர் ஒன்று உண்டென்றும் சிறுபாணாற்றுப்படையில் நீலநாகன் நல்கிய கலிங்கம்" என்று சொல்லப்பட்ட பழய அரசனுக்கு நேர்த்தியான வஸ்திரம் கொடுத்தவனுக்குப் பெயர் நீலநாகன் ஆகையினாலும், இவர் இருவரும் கள்ளர்களாகையாலே கள்ளர்களே நாகஜாதியாரென்பதையும் எடுத்துக்காட்டுகிறார்கள். இந்த அபிப்பிராயத்தின் உண்மையை இங்கு நாம் விரிவாய் விசாரணை செய்யவேண்டியதில்லை. நாம் பல நூல்களிலிருந்தும் கதைகளிலிருந்தும் மணிமேகலை சிலப்பதிகாரம் முதலிய நூல்களில் சொல்லப்பட்ட நாகஜாதியாரும் பல்லவர் சோழர் பாண்டியர் முதலிய அரசர்களும் ஒருவருக்கொருவர் கலப்புமணம் செய்துகொண்டார்கள் என்று அறிகிறதினால் அப்படியே வித்தியாசங்கள் திராவிடர்க்கும் நாகஜாதியார்களுக்கும் ஒரு காலத்தில் இருந்திருந்தாலும் அவை பிற்காலத்தில் மறைந்து போயின. இதற்கு மேற்கோளாக மணிமேகலையில், "வென்வேற் கிள்ளிக்கு நாகநாடாள்வோன் றன்மகள் பீலி வளைதான் பயந்த புனிற்றிளங் குழவி" என்று சொல்லப்பட்டிருக்கிறது. சோழ அரசர்கள் இப்படியே அனேக விவாகங்கள் செய்திருக்கிறார்களென்று தெரிகிறது. மேலும், பாரதத்திலிருந்து, அர்ச்சுனன் ஒரு நாக அரசன் மகளை விவாகம் செய்துகொண்டதாகத் தெரிகிறது. பல்லவ அரசர்கள் திராவிடர்களோ என்று சிலர் சந்தேகிக்கிறார்கள். ஆனால் அவர்கள் நாகஜாதியார்தான் (அப்படிப்பட்ட ஒரு ஜாதியாரிருந்திருந்தால்) என்று அவர்கள் நடவடிக்கைகளிலிருந்தும் கொள்வினை கொடுப்பினையிலிருந்தும் தெரிகிறது.

இனி கள்ளரில் அநேகர் தங்களை இந்திரகுலத்தார் என்றும் தாங்கள் இந்திரனின் வழித்தோன்றல் என்றும் கூறுவதோடு, தஞ்சாவூர், மதுரை ஜில்லாக்களிலுள்ள 100,150 வருஷங்களுக்கு முன் நடந்த சாசனப் பத்திரங்களிலும் அப்படியே எழுதியிருக்கிறார்கள். இவர்கள் தங்களை இப்படி உயர்த்திக் கூறிக்கொள்வது இவர்களிருந்த கால மேன்மையான குலத்துக்கும் உயர்ந்த பதவிக்கும் ஒத்ததாகும், மற்றொரு கதையுண்டு. இராமர் தண்டகாரண்யத்திலுள்ள அகலிகைக்கு பாப விமோசனம் செய்த காலத்தில் அவ்விடத்தில் வந்த மூன்று மனிதர்களில் ஒருவன் திருட்டுத்தனமாய் ஒளிந்துகொண்டதாகவும் மற்றொருவன் இராமனுக்கு எதோ

நன்மை புரிந்ததாகவும், மூவரி லொருவன் நன்மை புரியாமல் வெகு அகமாய்ப் பேசியதாகவும், அதன் காரணமாக இராமர் மறைந்தவனை கள்ளனென்றும், நன்மை புரிந்தவனை மறவோன் அல்லது மறவனென்றும் அகமாகப் பேசினவனை அகம் உடையான் அல்லது அகம்படியானென்றும் சொல்லியதாகக் கதை. இக்கதை ஒரு சிறிதும் உண்மையல்ல வென்ற போதிலும், இக்கதையிலிருந்து கள்ளர், அகம்படியார், மறவர் இவர்கள் ஒரே பிறப்பினரென்றும் இத்தென்னிந்தியாவில் கள்ளர் நீடித்த ஜாதியார்களென்றும் தெரியலாம். இக்கதைபோன்ற பல கட்டுக்கதைகளிலிருந்தும் இப்பொழுதும் கள்ளரிடத்திலுள்ள வீரம் முரட்டுத்தனம் இவற்றிலிருந்தும் இச்சாதியாரே உண்மைத் திராவிடரென்றும் இராமாயணத்தில் சொல்லப்பட்ட ராக்ஷசர்கள் என்றும் சிலர் ஊகிக்கிறார்கள். இவற்றை நாம் ஒத்துக்கொள்ளக்கூடிய ஆதாரங்களில்லை.

## II

இனி இவர்கள் இவ்வளவு தொன்றுதொட்டு வந்தவர்களானால் சங்க நூல்களிலும் பழைய தமிழ் நூல்களிலும் சிலாசாசனங்களிலும் இவர்களைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறதா வென்று கேட்கலாம். அகநானூறில் கள்ளர் அல்லது கள்வர் என்பவர்களைப்பற்றி எழுதப்பட்டிருக்கிறது. இதை அநேகர் சந்தேகிக்கிறார்கள். திருநெய்த்தானம் கி. பி. 960-ம் வருஷம் சிலாசாசனமொன்றில், சோழ அரசன் முதலாவது பாராந்தகன் கைக்களர் படையைப் பற்றி, பேசுகிறபொழுது கடிகாவல் கள்ளனொருவன் அப்படையில் போர்வீரனாக இருந்ததாகவும் கூறப்பட்டிருக்கிறது. ஆயினும், அதிகமாகப் பல்லவர்களென்று அக்காலத்தில் இவர்களைக் கூப்பிட்டதால் கள்ளன் அல்லது கள்வனென்ற பெயரால் இவர்கள் காணப்படவில்லை. விஷ்ணு ஸ்தல மான்யம் என்ற நூலிலும் கள்ள சிற்றரசர்களைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது.

கள்ளரைப் பல்லவ அரசர்களின் வழித்தோன்றலென்பதில் ஆக்ஷேபணையில்லை; பல்லவ அரசர்களின் வீரமும் தைரியமும் இரத்தமும் இன்னும் இவர்களைவிட்டு அகலவில்லை யென்றும் கூறப்படுகிறது. இப்பொழுது இதன் உண்மையை ஒருவாறு ஆராய்வோம். பல்லவ அரசர்களின் தலைநகரம் காஞ்சியாகும். அதற்கு இன்னொரு பெயர் தொண்டைமண்டல மென்பதே

தொண்டைமண்டல வேளாளர் என்பவர்கள் இங்கிருந்தே தாங்கள் வந்ததாகவும், தாங்கள் பல்லவ அரசர்களின், ஒருவாறு, சந்ததியார்களென்றும் கூறுகிறார்கள். தொண்டைமா னென்பது கள்ளர்களின் ஒரு வகுப்பினரது ஒரு பட்டப்பெயராக வழங்குகிறது. மேலும், தற்காலம் கள்ளருக்கே தலைநாயகமாக விளங்கும் புதுக்கோட்டை ராஜாவும் தொண்டைமான் என்ற பட்டப் பெயரினாலேயே அழைக்கப்படுகிறார். தொண்டைமண்டல வேளாளரிலும் காரைக்காட்டு வேளாளரிலும் கோத்திரப்பெயர்க ளென்று சில பெயர்களிருக்கின்றன. ஒரே கோத்திரப்பெயர் கொண்டவருக்குள் விவாகம் நடக்கக்கூடாது என்பது சம்பிரதாயம். இதுவே பிராமணரிடத்திலும் வழக்கம், இதே கோத்திரப்பெயர்களும் கள்ளர்களிடத்தில் இன்றைக்கும் பட்டப் பெயராய் விளங்குகின்றன. முனையதிரையர் அல்லது முனையராயர் காலிங்கராயர் காடவராயர் முதல் பலவும் கோத்திரப் பெயர்களே. இவைகளே கள்ளர்களில் சிலருடைய பட்டப் பெயர்களுமாயிருக்கின்றன. ராயரென்று முடிவது ராசவம்சம் என்பதைக் குறிக்கிறது. கோத்திரப் பெயர்களும் பட்டப் பெயர்களும் ஒத்திருப்பதிலிருந்து தொண்டைமண்டலம் வேளாளர்களும் கள்ளர்களும் ஒரே இடத்திலிருந்து வந்தவர்களென்றும், ஒரு கோத்திரத்திலிருந்து பிரிந்தவர்க ளென்றும் ஊகிக்க வேண்டியிருக்கிறது. மேலும் வெகுகாளாய் வழங்கிவரும் பழமொழியில் ஒன்று "கள்ளன் மறவன், கனத்ததோர் அகம்படியன், மெள்ள மெள்ள வெள்ளாளன்" என்றிருக்கிறது. இப் பழமொழியிலிருந்து அநேகர் தற்காலம் கள்ளர் மறவர் குறைந்தவர்களென்றும் அகம்படியர் வெள்ளாளர் மேலோர் என்றும் சொல்வது பிசகு. இப் பழமொழி உண்மையானால் கள்ளர் மறவரிலிருந்து அகம்படியர்களுண்டானார்களென்று தெரிவதோடு வெள்ளாளரில் அனேகர் முதலில் இச்சாதிகளிலிருந்துதான் சிதறிப் போயிருக்கிறதாகத் தெரிகிறது. அகம்படியர்களென்ற பெயர் சுமார் 1000 வருஷங்களுக்கு முன் வழங்கினதாகத் தெரியவில்லை. தேவர்களென்ற பட்டப் பெயர் கள்ளர், மறவர், அகம்படியர் இம்மூன்று ஜாதியாரிடத்திலேயே காணப்படுகிறது. தேவர்களென்றால் அரச வம்சத்தார்களென்று பொருள். முக்குலத்தாரும் ஒரு பிறப்பின ரென்பது "பூலோக உற்பத்தி" என்ற நூலில் காணலாம்.

பல்லவ அரசர்களின் தலைநகரம் காஞ்சியானாலும் அவர்களுடைய ராஜ்ஜியம் ஒருகாலத்தில் தஞ்சை திருச்சிராப்பள்ளி

ஜில்லாக்கள் வரையில் பரவியிருந்தது. சொற்பகாலம் பாண்டிய அரசனையும் பல்லவ அரசர்கள் தங்கள் கைக்குட்படுத்தினார்கள். அக் காலத்தில் கி. பி. 600, 700 ஆண்டில் பல்லவ அரசர்களின் சந்ததியார்களில் அநேகர் தஞ்சை திருச்சி ஜில்லாவில் வந்து தங்கினார்கள். மேலும், இவர்களில் அனேகர் சிற்றரசர்களாகவும், குறுநில மன்னர்களாகவும் பாளையபட்டுகளாகவும் நியமிக்கப் பட்டார்கள். இக் காலத்திலேயே கள்ளத் திருமங்கையாழ்வார் இருந்ததாகவும் தெரிகிறது.

திருமங்கையாழ்வார் தஞ்சை ஜில்லாவில் சீர்காழி தாலுக்கா வில் திருக்குறையலூர் கிராமத்தில் கள்ளர் குலத்தில் உதித்தவர். இவருக்குக் கலியனென்றும் திருமங்கை மன்னனென்றும் இரு பெய ருண்டு. இவர் சோழ அரசர்களின் கீழ் ஒரு சிற்றரசனாக ஆலி நாட்டை ஆண்டுவந்தார். அவருடைய தலை நகரம் திருமங்கையாக வேண்டும். இவர் தனக்குமேல் உயர்ந்த ஜாதியிலிருந்து ஒரு விஷ்ணுபக்தனின் குமாரத்தியை விவாகம் செய்துகொண்டு, தானும் ஒரு விஷ்ணுபக்தனாக நாலாயிரப் பிரபந்தத்தில் மிகுதி யான பாட்டுகள் பாடியிருக்கிறதோடு, ஸ்ரீரங்கத்தில் 3-வது மாடவளாகத்தைக் கட்டினதாகவும் தெரிகிறது. இவருடைய விஷ்ணுபக்தியை, யாவரும் அறிவார்கள். மேலும், நாலாயிரப் பிர பந்தத்திலிருந்து ஸ்ரீரங்கம், திருப்பதி, திருமால்குன்றம் (கள்ள அழகர்கோவில்) முதலியவை தொன்றுதொட்டு பெரிய விஷ்ணு க்ஷேத்திரங்களாகத் தென்னிந்தியாவில் வழங்கி வந்தனவாகத் தெரி கிறது. ஆனதால், முற்காலத்திலேயே கள்ள அழகர் கோவிலும் பெரிய விஷ்ணு க்ஷேத்திரமாக இருந்திருக்கிறது. இந்த க்ஷேத் திரம் மதுரை ஜில்லாவிலிருக்கிறது. இதன் மூலமாய் நாம் அறிவ தென்னவென்றால், கள்ளர்களும் மதுரை ஜில்லாவில் முற்காலம் தொடங்கி இருந்திருக்கவேண்டுமென்பதே. இல்லாவிட்டால் அப்படி கள்ள அழகர் என்ற பெயரால் அழகர் அழைக்கப்படுவாரா?

இன்னொரு கதையுண்டு, சில கள்ளர்கள் சோழநாட்டிலிருந்து காட்டுக்குத் தங்கள் நாய்களோடு வேட்டையாடப் போனபொழுது, பாண்டி நாட்டில் ஓர் இடத்தில் ஒரு மயில் இவர்கள் நாய்களோடு சண்டை செய்ததாலோ, அல்லது ஒரு மயில் வட்டமிட்டு ஆடின தின் பொருட்டாலோ அந்த இடத்திலேயே அவர்கள் தங்கிவிட்ட தாகவும், அவ் விடத்துக்கு மயிலாடுகோட்டை அல்லது மல்லாடு

கோட்டைநாடு என்று பெயர் வைத்ததாகவும் கதை. இக்கதையி லிருந்து கள்ளர்கள் பாண்டி நாட்டிலும் வெகு காலத்துக்கு முன்னமேயே வசிக்க ஆரம்பித்துவிட்டார்கள் என்று தெரிகிறது. இப்பொழுதும் மதுரைக் கள்ளரில் அம்பலகாரரான அநேகர் வைத்திருக்கும் பட்டயங்களி லிருந்தும் மான்யங்களி லிருந்தும் இவர்கள் பாண்டிய மன்னர்களிடத்தும் அவர்களின் சிற்றரசர்க ளிடத்தும் படைத் தலைவர்கள் நியமிக்கப்பட்டிருந்ததாகத் தெரி கிறது. நான் முன்னமே சொன்னபடி சோழ அரசர்களிடத்தி லும் கள்ளர் அநேகர் போர்வீரர்களாக இருந்தார்கள். கள்ளரில் சோழகர் என்ற பட்டம் சிலருக்குண்டு. இப்பட்டம் கள்ளர்கள் சிலருக்கு, உறையூரிலுள்ள சோழன் ஒருவனுக்கு உதவியாகக் கள் ளர்கள் சென்று சேர அரசனை வெற்றி பெற்றதற்காகக் கொடுக் கப்பட்டது என்று தெரிகிறது. தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள பட்டுக்கோட்டை என்ற பட்டணம் பட்டு மழவராயன் என்றவன் அப்பட்டணத்தை ஆண்டதின் பொருட்டே இன்றைக்கும் பட்டுக் கோட்டை என்று பெயர் பெற்றதாகத் தெரிகிறது.

கள்ளர்கள் தாங்கள் பல்லவநாட்டை விட்டு, சோழ பாண்டிய நாட்டிலும் கௌரவமாய் இருந்ததோடு, அதிகாரமும் வழக்கம் போல் செலுத்தினார்கள். பல்லவ அரசர்களே சேர சோழ பாண்டியர்களுக்குப் பகைமையாக இருந்ததாலும், இவ்வரசர்களின் பிரஜைகளும் இவர்களை ஏளனமாகவும் பகைமையோடும் நடத்திய தோடு இவர்களைப் பல்லவரொன்றால் அயோக்கியன் என்று பொருள்பட உபயோகித்தும், பல்லவ அரசர்களின் சந்ததியார் களையும் கள்ளன் அல்லது திருடன் என்ற பெயரால் அழைத்த தாகவும் ஒரு சாரார் அபிப்பிராயப்படுகிறார்கள். இன்னொரு சாரார், இவர்கள் காவல்காரர்களாகவும் பிறர் பொருளைச் சத்துருக்களிடத்தினின்று காத்துவந்தாலும் கள்ளர் என்று கூப்பிடப்பட்டதாகவும் கூறுகிறார்கள். இதன்பொருட்டே இச் சாதியில் சிலர் தஞ்சை மதுரை ஜில்லாக்களில் இன்றைக்கும் குடிக்காவல் ஜனங்களிடத்தில் கேட்பதாகவும், கொடுக்காதவர்க ளிடத்திலிருந்து திரவியம் மாடுகள் முதலியவற்றை, ஒரு பாடம் கற்பிக்க, களவு கொண்டுபோவதாகவும் சொல்லுகிறார்கள். பல்லவ அரசாங்கமும் ஒருவாறு க்ஷீணதிசை யடைந்தபொழுது, நாயக்கர், துலுக்கர், மகாராஷ்டிரர் முதலியவர்கள் இத் தமிழ் நாட்டை யாண்டுவந்தபொழுது இவர்களுடைய போர்வீர வேலையும்

ஒழிந்தது. வெகு சிலரே புதுப் பட்டாளங்களில் எடுத்துக் கொள்ளப்பட்டார்கள். முன்னிருந்த சிற்றரசர்களில் சிலரும் பாளையப்பட்டுகளுமே தங்கினார்கள். கள்ளர்களிலுள்ள இவ்வளவு ஜெமீன்தார்களுக்கும் இதுவே காரணமாகும். மிகுதியானவர்கள் தங்கள் மேன்மை குலைந்து கஞ்சிக்குக்கூட கஷ்டப்படத் தொடங்கிவிட்டார்கள். தஞ்சாவூர் ஜில்லாவில் நீராரம்பத்திலும் மற்ற செழிப்பு நிலங்களிலும் தங்கினவர்கள், நல்ல விவசாயிகளாகவும் சாது ஜனங்களாகவும் கூடியமட்டும் திரும்பிவிட்டார்கள்.

ஆனால், மணற்பாங்குகளிலும் செழுப்பும் தண்ணீரும் குறைந்த நாடுகளில் தங்கினவர்கள் தாங்கள் முன்வாங்கின குடிக்காவல் கூலிவாங்க ஆரம்பித்ததோடும், கொடுக்காதவர்களைப் பலவந்தம் செய்ததோடு அவர்கள் சொத்துக்களையும் ஒரு பகுதியோர் கவர்ந்துகொள்ள ஆரம்பித்தார்கள். அதையே இன்றைக்கும் சிலர் பின்பற்றுகிறார்கள். இதனாலேயே இவர்களில் அநேகர் குற்றவாளிகளுக்காக ஏற்பட்ட சட்டத்தில் அகப்பட்டு (Criminal Tribes Act) கஷ்டப்படுகிறார்கள்.

தஞ்சை ஜில்லாக் கள்ளரை விட்டு ஆங்கிலேயர் வந்த காலத்தில் மதுரை, ராமனாதபுரம், புதுக்கோட்டை முதலிய இடங்களிலுள்ள கள்ளர்களின் செய்கைகளைக் கவனிப்போம். இவ்விடங்களில் கள்ளரில் சில்லரையே ஆரம் தேச சரித்திரத்தில் (Orme History) கொடூரக்காரர்களென்றும் ஒருவருக்கும் அஞ்சாதவர்கள் என்றும் கூறப்படுகிறது. நாயக்கர் அரசகாலத்தில் இவர்கள் அரசனுக்கு கப்பம் கட்டமாட்டோமென்று மறுத்துவிட்டார்கள். 1710-1720 கி. பி-யில். ஆண்ட விஜய ரெகுநாத சேதுபதியின் இடங்களைக் கூட இவர்கள் கொள்ளையடிக்கக் கிளம்பி, பின்னர் அகப்பட்டார்களென்று சொல்லப்பட்டிருக்கிறது. கள்ளர்கள் மதுரையை ஆண்ட மகம்மதிய அரசிலைக்கூட எதிர்த்தார்களென்று தெரிகிறது. இவர்களை அடக்க ஆங்கிலேய அரசாட்சியார்கூட வெகு கஷ்டப்படுவதாகவும் சொல்லப்படுகிறது. முன்பு, கொள்ளையிலேயே தங்கள் வாழ்நாளைக் கழித்த அநேக கள்ளர்கள் கூட பெரியாறு பெருக்குக்குப்பிறகு அங்கு நிலத்தைச் சாகுபடி செய்துகொண்டு இப்பொழுது சமாதானமுள்ள ஜனங்களாக ஆய்விட்டதாகவும் பிரஸ்தாபம்.

புதுக்கோட்டை ராஜா ஓர் பாளையப்பட்டாக இருந்ததாகவும், கொண்டிமறவனென்ற சேதுபதி ஆங்கிலேயருக்கு அடங்காம லிருந்ததோடு கள்ளர்களுக்கும் அநேக தீங்குகளைச் செய்ததற்காக அவரைப் பிடித்துக் கொடுத்ததற்காகப் புதுக்கோட்டையை, விஜயம் தொண்டமானென்ற வம்சத்துக்குக் கொடுத்ததாகவும் சரித்திரம். இந்த கொண்டி மறவனானவன் ராமனாதபுரம் ஜில்லா மல்லாகோட்டை நாட்டுக் கள்ளரில் ஒரு பெண்ணுடைய தாலியை அறுத்துவிட்டதாகவும், அதினாலேயே அவர்களில் சிலர் அறுத்த தாலியைக் கட்டாமல் கயிற்றையே கட்டிக்கொள்வதாகவும் கதை.

இனிக் கள்ளரில் ஏதாவது முற்கால ஐக்கியத்தையும், ஒற்றுமையையும் காட்டும் அடையாளங்கள் இப்பொழுது இருக் கின்றனவா வென்று யோசிப்போம். இக் கள்ள ஜாதியார்மட்டும் இன்றைக்கும் ஒற்றுமையாய் ஒரே ஊர்களில் இருப்பதோடு, பழய காலத்திலுள்ள நாடு என்ற பெயர்களையும் நாட்டுக் கூட்டங்களையும் ஒருவாறு நடத்தி வருவதாகத் தெரிகிறது. தஞ்சை ஜில்லாவில் கள்ளகம், சுந்தாநாடு, காசாநாடு, கோனூர் நாடு, கீழலங்க நாடு, தென்னமநாடு முதலிய [illegible] நாடுகளாகப் பல நாடுகள் பிரிக்கப் பட்டிருக்கின்றது. மதுரை, ராமனாதபுரம் ஜில்லாக்களிலுள்ள கள்ளகம் கீழநாடு, மேலநாடு, பிரமலநாடு, மல்லாகோட்டை நாடு, பட்டமங்கல நாடு முதலிய பல பிரிவுகளாகவும் பிரிக்கப்பட் டிருக்கிறது. நாட்டுக் கூட்டங்கள் வெகுநாளாய் நடந்துவந்தும் இப்பொழுது சொற்ப காலமாய் அவ்வளவு மும்மரமாய் நடந்து வரவில்லை என்றும் தெரிகிறது. தற்காலம் கள்ளரென்றால் திருடரென்று பொருள்படுவதினால், கள்ளஜாதியாரை ஆங்கிலேய ரும் மற்றுமுள்ள தமிழரும் கள்ளஜாதியென்று சொல்லிய உடனே அவனைத் திருடனோடு சேர்த்துவிடுகிறார்கள். இது எழுதுபவர் இரண்டு வருடத்துக்கு முன் ஒரு பெரிய ஆங்கிலேய கனவானைச் சந்தித்தபொழுது, அக் கனவான் இவரை என்ன ஜாதி என்று வினவ இவர் கள்ளரென்று சொல்ல அவர்கள் " இவ்வளவு நாளும் நான் இதை அறியேனே, நீர் தி[illegible] [illegible] புன் சிரிப்போடு சொன்னார். உடனே இ[illegible] கள்ளர் என்[illegible] ஒன்று உண்டு என்று சொல்ல, அ[illegible] எனக்கு அப்படிப்ப[illegible] தொரு ஜாதிக்குத் திருட்டைத் [illegible] வேறு தொழிலு[illegible] என்று அன்றைக்குத்தான் தெரிந்த[illegible] சொன்னார். இன்னொரு சமயத்தில் ஒரு பி. ஏ. படிக்கும் மா[illegible]ர் இவ்வியாசம் எழுதுபவ[illegible]

ளைக் கள்ளனென்று கேட்டுப் பயந்து ஒளிந்தார். பின்னர் இவர் அவரை ஏன் அப்படிப் பயப்படுகிறீர் என்று கேட்க அவர் "புதுச்சேரியில் நான் சிறு பிராயமுதல் கள்ளன் வந்துவிட்டா னென்றால் ஓடி ஒளிந்துகொள்வது வழக்கம். அப்படியே இப் பொழுதும் கள்ளனென்றவளவில் எனக்கு பயம் வந்துவிட்டது" என்று சொன்னார். குலத்தைக் கெடுக்கவந்த கோடாரிக் காம்பு என்பதற்கேற்ப சிலர் நடவடிக்கைகளால் இன்னும் இச் சாதியாரை அநேகர் எழ்மையாய்ப் பேசுகிறார்கள்.

## III

நாம் இனி, சில ஜாதியார்கள், தென்னிந்தியாவில் சென்ற 4, 5 வருடங்களுக்குள் என்ன என்ன வேலைகள் தங்கள் நன்மைக் காகச் செய்துவருகிறார்க ளென்பதைக் கவனிப்போம். இங்குத் தென்னிந்தியாவிலுள்ள எல்லா சாதியார்களும் செய்துவரும் வேலைகளை எடுத்துச் சொல்வதென்றால் அசாத்தியம். முக்கியமாய் 4 ஜாதியாரைப் பற்றியே இங்கு எடுத்துரைப்போம். வட ஜில்லாக் களில் கம்மா, நாயுடு, லிங்காயத்தார்கள் முதலிய பல ஜாதியார்கள் சங்கங்கள் ஸ்தாபித்து தங்கள் மேம்பாட்டுக்காகப் பாடுபட்டாலும் நாம் இங்கு வொக்காலிகர்களையும் ரெட்டியார்களையும் பற்றியுமே எடுத்துக் கூறுவோம். சென்ற 4, 5 வருஷமாக நடக்கும் ராஜீயப் போராட்டங்களில் ஒவ்வொரு ஜாதியாய்க் கிளம்பி தங்கள் மேம் பாட்டைக் கருதும்பொழுது நாம் மட்டும் நம் மேம்பாட்டைக் கருதா விட்டால் நாம் குடைக்குள் விளக்கைப்போல் உலகத்தி னியக்கங் களில் மறைந்து போவோமென்று பல மேதாவிகள் கருதுகிறார்கள். இந்நிமித்தமாகவே பல ஜாதியர்களும் தங்கள் தங்களுக்காக சங்கங்கள் ஏற்படுத்தித் தங்கள் குலத்தினர் மேம்பாட்டுக்குரிய கல்வி முதலியவற்றில் சிரத்தை எடுத்துக்கொள்வதோடு தங்களா லான வரையில் ராஜியத்திலும் தங்கள் பங்கைக் கேட்கிறார்கள்.

வொக்காலிகர் என்ற ஜாதியார்கள் அதிகமாக மைசூர் நாட்டி லிருக்கிறார்கள். அவர்கள் ஒரு பெரிய ஜாதியாயிருந்தும் தங்களைத் தாங்களே கவனிக்காமல் படிப்பிலும் மற்ற பூஸ்திதியிலும் குறைவாக இருந்தார்கள். இதை யோசித்தே சில வருஷங்களுக்கு முன் "வொக்காலிகர் சங்கம்" என்ற சங்கத்தை ஏற்படுத்தி னார்கள். இச் சங்கத்தில் திரளான பெயரை அங்கத்தினராகச் சேர்த்தார்கள், கல்யாணம், சடங்கு முதலிய நன்னாளில் அச்

சாதியார் ஒவ்வொருவரும் தங்களாலானவரையில் அச் சங்கத்துக்கும் பணம் கொடுக்கவேண்டுமென்று தீர்மானித்து அப்படியே வாங்கினார்கள். கிளைச்சங்கங்களை ஒவ்வொரு ஊரிலும் ஏற்படுத்தினார்கள். அச் சங்கங்களின் மூலமாய் அநேக உன்னதமான விஷயங்களைக் கற்பித்தார்கள். வந்த தொகையிலிருந்து அங்கங்கே பள்ளிக்கூடங்கள் வைத்து, இச்சாதிப் பையன் ஒவ்வொருவனும் அப் பள்ளிக்கூடத்தில் படிக்கவேண்டுமென்று கட்டாயப்படுத்தினார்கள். அங்கங்கே முடிந்த வரையில் இலவச விடுதிகளும் அப் பையன்களுக்கு வைத்தார்கள். சில இடங்களில் விவசாயம், வியாபாரம் முதலியவைகள் கூட கற்பித்தார்கள். இப்பொழுது இவற்றின் காரணமாக மைசூர் சமஸ்தானத்தில் இவர்களே கல்வியில் சிறந்த ஜாதியாராகவும் முக்கியமான ஜாதியாராகவு மிருக்கிறார்கள். இவர்களில் அநேகர் மைசூர் சமஸ்தான சட்ட சபையிலமர்ந்திருக்கிறார்கள். இவர்களை மைசூர் சமஸ்தான அரசாங்கத்தாரும் வெகு கௌரவமாய் நடத்துகிறார்கள்.

ரெட்டி ஜாதியார்கள் ஆந்திரா நாட்டில் முக்கியமான ஜாதியாராவர்கள். இவர்களில் அநேகர் பணக்காரர்களாயும் பெரும் பூஸ்திதிக்காரர்களாயும் ஜெமீன்தாரர்களாகவுமிருக்கிறார்கள். இருந்தும் இவர்களில் உயர்தரக்கல்வி படித்தவர்கள் வெகு சிலரே. படிப்பில் இச்சாதியார்கள் கள்ளரைப்போல் அவ்வளவு குறையவில்லை. ரெட்டியார்களில் அநேகர் அநேகமாகத் தங்கள் திரவியத்தை நியாய ஸ்தலத்திலேயே செலவு செய்துகொண்டு வந்தார்கள். சொற்ப காலமாக ரெட்டி மகாஜன சங்கம் என்று ஒன்று ஏற்படுத்தி அதின் வருஷாந்திர மகோற்சவங்களையும் கடலூர், நெல்லூர் முதலிய முக்கியமான இடங்களில் தங்கள் ஜாதியாரின் பெரிய அந்தஸ்துள்ளவர்களை வரவழைத்து அக்கிராசனம் வகிக்க நடத்தியும் வருகிறார்கள். இச்சங்கம் நாளுக்குநாள் விர்த்தியாகிறது. இப்பொழுது கிளைச் சங்கங்களும் பல ஏற்பட்டிருக்கின்றன. இலவச விடுதிச்சாலை அவர்கள் ஜாதி மாணவர்கள் படிக்கவும் இலவசமாய் உண்ணவும் எங்கும் ஸ்தாபித்துக்கொண்டு வருகிறார்கள். சென்னையிலும் ஒன்று ஸ்தாபித்திருக்கிறார்கள். சென்ற 4, 5 மாதத்துக்குள்ளே லக்ஷக்கணக்கான ரூபாயை தங்கள் அபிவிர்த்திக்காகச் சேர்த்து வருகிறார்கள். சில மாணவர்களை மேல்நாடுகளுக்குக்கூட அனுப்ப முயற்சி செய்கிறார்கள். இனியுவர்கள் ஜாதி மேம்பாடடைய கிஞ்சித்தேனும் சந்தேகமில்லை.

மூன்றாவது, தமிழ் நாட்டிலுள்ள நாடார் குலத்தினர் மேம்பாடடையச் செய்துவரும் முயற்சிகளைப் பார்க்கலாம். நாடார் மகாஜன சங்கம் என்ற சங்கம் ஏற்படுத்தி அதற்காக வருஷாந்திர மகோற்சவத்தில் ஏராளமான ரூபாய்களைச் செலவழிக்கிறார்கள். இவர்கள் தாழ்ந்த நிலைமையை உத்தேசித்து 3 உயர்தரப் பள்ளிக்கூடங்கள் பொதுப் பணத்திலிருந்து வைத்து தங்கள் மாணவருக்குக் கல்வி இலவசமாய்ச் சொல்லிக் கொடுப்பதோடு, அவர்களில் சிலருக்கு உயர்தரக் கலாசாலையில் கல்வி கற்கக்கூட பண உதவி செய்கிறார்கள். இவர்கள் முக்கியமாக வியாபாரச் சாதியாரானதால் எளிதாய்ப் பணம் சேர்க்கக்கூடிய நிலைமையிலிருக்கிறார்கள். இன்னும் தங்கள் ஜாதி ஆசார சீர்திருத்தத்திலும் வெகு கவலை எடுத்து வருகிறார்கள் தங்களுக்கு வரும் புதிய, சட்டசபையில் ஒரு அங்கத்தினர் வேண்டுமென்று போராடுகிறார்கள். இவர்கள் வழக்கமாய்த் தாங்கள் வருஷாந்திர மகோற்சவத்திற்கு முக்கியமாய் அன்னிய ஜாதியினரும் பெரும் உத்தியோகஸ்தருமாயுமுள்ளவர்களையே வரவழைக்கின்றார்கள். இன்னும் சிறிது காலத்துக்குள் இவர்கள் மேன்மையான நிலைமைக்கு வந்துவிடுவார்களென்பது திண்ணம்.

நான்காவதாக, சௌராஷ்டிர பிராமணாள், மதுரையில் தங்கள் குலத்தார் மேம்பாடடையச் செய்து வருவதைச் சொல்லி நிறுத்துவோம். பட்டுநூற்காரர்கள் அல்லது சௌராஷ்டிரர்களென்போர் தங்கள் மேம்பாட்டுக்காக ஓர் உயர்தரப் பாடசாலை மதுரையில் வைத்திருக்கின்றார்கள். அநேக சிறிய பாடசாலைகளும், வைத்திருக்கிறார்கள். மதுரையில் சௌராஷ்டிர கிளப் என்றதொரு சங்கமும் வைத்திருப்பதோடு தாங்கள் வியாபாரத்திலும் கைத்தொழிலும் விர்த்தியடைய வேண்டிய பல மார்க்கங்களைத் தேடியிருக்கிறார்கள். சென்ற மாதத்தில்கூட அரசாங்கத்தார் தங்களைப் பிராமணரல்லாதாரோடு சேர்க்கவேண்டு மென்று சொன்னது பிசகு என்று போராடி அரசாங்கத்தாரிடத்திலிருந்து அப்படி செய்யக்கூடாதென்று உத்திரவு பெற்றார்கள். இப்பொழுது ஆசாரச் சீர்திருத்தத்திலும் வேலை செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள்.

இவற்றிலிருந்து நாம் கற்றுக் கொள்வது என்ன என்பதைப் பற்றிச் சுருக்கமாய்ச் சொல்லிவிடுவோம். இப்பொழுது ஸ்தாபித்திருக்கும் கள்ளர் மகா சங்கத்துக்கு கள்ளரும் ஐக்கியமாய்ச் சேர்ச்

சங்கங்கள் அங்கங்கே ஸ்தாபிப்பதோடு பிசகான காரியங்கள் செய்யும் நம் ஜாதியாரை அவர்கள் செய்யும் காரியங்களிலிருந்து தடுப்பதோடு, அப்படிச் செய்பவர்களுக்கு நல்ல படிப்பினைச் செய்யவேண்டும். அரசாங்கத்தார் இச் சாதியாரில் சிலரை (Criminal Tribes Act) கிரிமினல் டிரைப்ஸ் சட்டத்தில் எடுக்காமல், அப்படிப்பட்டவர்களை அந்தந்தக் கிராமத்தில் பஞ்சாயத்து நியமித்து அவர்களுடைய பந்தோபஸ்த்தில் சந்தேகப்பட்டவர்களை விடவேண்டுமென்று அரசாங்கத்தாருக்குத் தெரியப்படுத்த வேண்டும். இச் சாதியாரிடத்திலுள்ள அநேக ஒழுங்கான நடவடிக்கைகளை விட்டு, படாடோபமாய்ப் பிராமணர்களையும் மற்றவர்களையும் பார்த்து அவர்களைப்போல் கல்யாணம், ருதுசாந்தி முதலியவைகளில் செலவழிப்பது பிசகு என்று சொல்லவேண்டும். நியாயஸ்தலத்தில் வியாஜ்யங்களைத் தீர்த்துக்கொள்ளப் பணத்தை விரயம் செய்யாமல் தாங்களே தங்கள் கிராமத்திலேயே பஞ்சாயத்தின் மூலமாய்த் தீர்த்துக்கொள்ளவேண்டும். விதவாவிவாகம், கல்யாணம் முதலியவைக்குப் பிராமணனைக் கூப்பிடாமலிருத்தல் முதலிய நற்குணங்கள் இச்சாதியார் சிலரிடத்திலிருப்பதை நிலைநிறுத்த வேண்டும். கடைசியாக இச்சாதியாரிலேயுள்ள நூற்றுக்கணக்கான வித்தியாசங்களை அறவே விட்டு யாவருமொன்றென்று விவாகம் முதலியன செய்துகொள்ளப் பிரயாசைப் படவேண்டும்.

நாம் கல்வியைப்பற்றி அதிகமாய்ச் சொல்லவேண்டியதில்லை. கல்வி அபிவிர்த்தியிலேயே ஒவ்வொருவரும் கண்ணுங் கருத்துமாய் இருக்கவேண்டும்.

1911-ம் வருஷம் சென்ஸ்ஸ் கணக்கின்படி இவர்கள் எண்ணிக்கையில் , சுமார் 6-லக்ஷமிருந்தும், இவர்களில் கையெழுத்து போடவாவது கற்றவர்கள் 100-க்கு 7-க்குமேல் இல்லை என்று தெரிகிறது. அதிலும் ஆங்கிலத்தில் கையெழுத்தாவது போடக் கற்றிருப்பவர்கள் 1000-க்கு ஒருவர்கூட இல்லை என்று 1911-ம் வருஷ சென்ஸஸ் கணக்கிலேயே தெரிகிறது. இவர்களில் 10 வருஷங்களுக்குமுன் ஒருவர்கூட பெரிய உத்தியோகஸ்தராக (Gazetted Officers) இருந்ததாகத் தெரியவில்லை. இப்பொழுதும் இவர்களில் பீ.ஏ., எம்.ஏ. முதலிய பட்டம் பெற்றவர்கள் சுமார் 10-க்குமேல் இல்லை என்று தெரிகிறது. இவ்வளவு படிப்

பிலும் நாகரீகத்திலும் தாழ்ந்து கிடக்கிற இச் சாதியாரில் சுமார் 12,000 பேர் (Criminal Tribes Act) கிரிமினல் டிரைப்ஸ் என்ற சட்டத்தின் கொடூர வாயில் அகப்பட்டுக் கஷ்டப்படுகிறார்களென்றால், இச் சாதியார் அடைந்த கீழ்ப்பதவிக்கு என்ன அத்தாக்ஷி வேண்டும். இச் சாதியாரில் பல ஜெமீன்தாரர்களும் பூஸ்திதிக்காரர்களும் ஒரு ராஜாவு மிருந்தாலும் இச் சாதியாருக்கு என்ன பிரயோஜனம்? அவர்களுக்கு ஜாதி அபிமானம் ஒரு சிறிதுமில்லாமல் அவர்களின் மேம்பாட்டைக் கவனிக்காமலே வந்துவிட்டார்கள். தஞ்சை ஜில்லாவில் காலஞ்சென்ற ஹரித்துவாரமங்கலம் ஸ்ரீமான் ரெகுநாத ராஜாளியார் அவர்கள் 'இந்திர குலாதிபர் சங்கம்' என்று ஒரு சங்கம் ஸ்தாபித்து அச் சங்கம் மிகுதியாக வேலைகளைச் செய்யாமல் அவரோடே மறைந்துபோய் விட்டது. இப்போது சென்ற மாதம் தஞ்சையில் ஆரம்பித்திருக்கும் "கள்ளர் மகாசங்கம்" வெகுவாக நன்மைகளை இச் சாதியாருக்குச் செய்யும் என்று நினைக்கிறோம். சிலர் இச் சங்கத்தில் ஜெமீன்தார் வாண்டையார் முதன்மையாக தலைமைவகிக்கிறபடியால், அநேக கற்றவர்களும் இச் சாதியாரில் சிறத்தை யுள்ளவர்களும் எங்கு சேரமுடியாமல் போய்விடுமோவென்று சந்தேகிக்கிறார்கள். நாம் அப்படி சந்தேகப்படக் காரணமில்லை என்று நம்புவதோடு ஒவ்வொரு கள்ளரும் இச் சங்கத்தில் சேர்ந்து இச் சங்கத்தையும் இச் சாதியாரையும் மேம்படுத்துவதில் கண்ணும் கருத்துமாய் உழைப்பார்களென்று நம்புகிறோம்.

## ‘திராவிடன்’ ஆசிரியர் குறிப்பு

### கள்ளர் நிலைமை

நம் நாட்டிலுள்ள கள்ளர் வகுப்பார் பொதுவாகச் சமூக நிலையில் தாழ்ந்துள்ளார்கள். அவர்கள் கல்வியில் பின்னடைந்துள்ளார்கள். ஆனால் ஜனத்தொகையில் குறைந்தவர்களல்லர். அவர்கள் ஜனத்தொகை சுமார் 6-லட்சமாகும். இவ் வகுப்பாரில் சுமார் பன்னீராயிரம் பேர் குற்றச் சட்டத்திற்கு (கிரிமினல் ட்ரைப்ஸ் ஆக்ட்) இரையாக்கப்பட்டிருக்கின்றன ரென்பதை யாம் மிக விசனத்துடன் வரைகின்றோம். இவ் வகுப்பார் பலர் களவு முதலிய தகாத செய்கைகள் செய்கின்றனரென்று அரசாங்கத்தார் அவர்களைக் குற்றச் சட்டத்திற்கு உட்படுத்தி யிருக்கின்றனர். இவ் வகுப்பில் சில இராஜாக்களும் பல ஜமீன்தார்களும் தனவந்தர்களும் இருக்கின்றனர். இவர்களைக் குறுநில மன்னர்களென்றே சொல்லலாம். இவர்கள் இங்ஙனமிருந்தும் யாது பயன்? இவர்கள் தங்கள் வகுப்பின் பொது நன்மைக்கு உழைக்க முற்படவில்லை. வகுப்பின் நன்மையை நாடாதவர்களால் தேசத்துக்கு நன்மை யெப்படி யுண்டாகும்? “செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்” என்று மிகச் சுருக்கமாகக் கூறியிருக்கும் சிறந்த முது மொழியை நந்தமிழ் மக்களாகிய இவர்கள் உணர்ந்து நடக்காமலிருப்பது மிகவும் விசனிக்கத்தக்கது. தங்கள் வகுப்பினரைச் சீர்திருத்தி மேன்மையுறச் செய்ய இச் செல்வவான்களால் இயலாதா? தங்கள் வகுப்பார் குற்றச் சட்டத்திற்கு ஆளாகும்படி பார்த்திருப்பது இவர்களுக்கு அழகாகுமா? அன்றியும் இவர்களின் பெருமை அதனால் குன்றாதோ? ஸ்ரீமான் ஏ. சோமசுந்தரம் பி ஏ., தம் வகுப்பாரின் நிலைமைக்கும் அறியாமைக்கும் இரங்கி, அவர்களுக்கு அறிவுச் சுடர் கொளுத்துவான்வேண்டி கள்ளர் சரித்திரத்தைத் திராவிடன் மூலமாகத் தெரிவித்திருக்கின்றார்.

திராவிட மக்களின் நலத்தை நாடி உழைக்கும் ஒப்பற்ற ஒருவனாகிய நம் “திராவிடன்” அதைக் கள்ளர் சகோதரருக்கு அறிவித்து வருகின்றான். மேற்கண்ட பன்னீராயிரம் பேரும் குற்றச் சட்டத்தின் வாயினின்றும் விரைவில் விடுபட்டு, மேன்மையும் சுயேச்சையும் அடையுமாறு அரசாங்கத்தார் நன்கு கவனிப்பார்களாக. இவ்வகுப்பைச் சார்ந்த குறுநில மன்னர்களும் நாணமுற்று இனியாவது பொதுநல வுழைப்பை மேற்கொள்வார்களாக.

---

கூட்டுறவுப் பதிப்பகம், தஞ்சாவூர்